


சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
32nd year
of Publication
23—7—1967

# 12 லட்சம் பரிதாபங்கள் ... !

— காஞ்சித் தலைவன்

அரபு நாடுகளுக்கும் இஸ்ரேலுக்கும் தகராறு. அது இந்தமுறை சண்டையாக வெடித்தபோது, இந்திய அரசாங்கம் அரபு நாடுகளை ஆதரித்தது.

இந்திய அரசின் கொள்கைபற்றி இந்தியாவுக்குள்ளேயே இரண்டுவிதமான கருத்துக்கள் எழுந்துள்ளன. எதிர்ப்பாளர்கள் போடுகிற கூச்சலையும் எழுதுகிற வேகத்தையும் பார்த்தால். இந்திய அரசு பெருந்தவறு செய்துவிட்டது போன்ற ஒரு தோற்றம் உண்டாகிறது...

அண்டை நாடுகளையும் அயல் நாடுகளையும் பொறுத்தவரை, இந்தியா நடுநிலைக் / கொள்கையைக் கடைப்பிடித்து வருகிறது.

அரபு - இஸ்ரேல் தகராற்றில் அரபுநாடுகளை வெளிப்படையாக ஆதரித்ததன் மூலம் தனது கொள்கையில் இந்தியா தவறிவிட்டது என்பது ஒரு சாராரின் குற்றச்சாட்டு. "சின்னஞ்சிறிய இஸ்ரேல் நாட்டை ஒழித்துவிட அராபியர்கள் முயல்கிறார்கள்; அதற்கு இந்தியா துணைநிற்பது, நாடுகளின் வாழ்வுரிமையை நசுக்கும் கொடும்பாதகம்" என்பது மற்றொரு சாராரின் குற்றச்சாட்டு. இஸ்ரேலுக்குப் பின்பலமாகஉள்ள ஆங்கில-அமெரிக்கத் துணையினால், இந்தக் குற்றச்சாட்டுக்காரர்களின் குரல் சற்றே ஓங்கி ஒலிக்கிறது.

நேற்று நடந்ததையும் அதன் விளைவாக இன்று நடப்பதையும் அடியோடு மறந்துவிட்டு, "கண்டதே காட்சி கொண்டதே கோலம்" என்ற பாணியில் குற்றச்சாட்டுகளை அடுக்கு எளிது. எந்தப்பக்கம் நியாயம் இருக்கிறது என்று காண வேண்டுமானால், மனத்தூய்மையோடு நிகழ்ச்சிகளை ஊன்றிக் கவனிக்கவேண்டும்.

இஸ்ரேல் என்னும் நாடு பிறந்து சுமார் இருபதாண்டு ஆகிறது. இந்த நாடே "செயற்கைக் கருத்தரிப்பு மூலம் பிறந்த ஒருகுழந்தை" தான் என்பதை முந்திய நிகழ்ச்சிகளை உணர்ந்தோர் நன்கு அறிவார்கள்: ஏசுபெருமான் பிறப்பதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு "இஸ்ரேலர்" என்னும் இனத்தினர் இப்போது இஸ்ரேல் நாடாக்கப்பட்டுள்ள நிலப்பகுதியில் வாழ்ந்துவந்தார்கள் என்று பைபிள் கூறுகிறது. அக்காலங்களில் ஏற்பட்ட பல வரலாற்று மாறுதல்களால் அவர்கள் எங்கெங்கோ சிதறிப்போனார்கள்... கடந்த சுமார் ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளாக இந்த இடத்தில் அராபியர்களே வாழ்ந்துவந்தார்கள்.

பல நாடுகளில் ஊடுருவி, அங்கங்கே செல்வத்தோடும் செல்வாக்கோடும் வாழ்ந்த (இஸ்ரேலரின் வழியினரான) யூதர்கள், தங்கள் முன்னோர் வாழ்ந்த நாட்டை மீண்டும் தங்களுடையதாக்கவேண்டும் என்று திட்டமிட்டார்கள். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தத் திட்டம்தீவிரம் அடைந்தது. மற்றவர்களைச் சண்டை மூட்டிவிட்டே வாழ்ந்து பழகிவிட்ட ஆங்கிலேயர், யூதர்களுக்கு ஆதரவுதந்து அராபிய நாட்டுக்குள்ளே நச்சுவிதையை ஊன்றினார்கள். அமெரிக்கர்களும் அவர்களுக்குத் துணை நின்றார்கள். ஜெர்மனியில் யூதர்களுக்குப் பெரும் தொல்லை விளைக்கப்பட்டதைக் காரணமாகக்காட்டி, ஜெர்மனியிடமிருந்து பெருந்தொகை நட்ட ஈடாக இஸ்ரேலுக்கு வாங்கிக் கொடுத்தார்கள். ஆயுத தளவாட வகைகளில் தாங்களே உதவிசெய்து, இஸ்ரேல் என்னும் பெயரில் அராபியருக்கு ஒரு தலைவலியை உண்டாக்கினார்கள்.

இந்தத் தலைவலியை அவர்கள் உருவாக்கிய 1947-48-ம் ஆண்டுவாக்கில் வேறு ஒரு பெரிய நெஞ்சுவலியும் ஏற்பட்டது. அதுதான் இந்தச் "செயற்கைக் குழந்தை"யின் பிறப்பினால் ஏற்பட்ட அகதிகள் பிரச்சினை. இஸ்ரேல் நாடாக உருவாகியுள்ள பகுதியில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வாழ்ந்துவந்துள்ள முஸ்லிம்கள் "இஸ்ரேல் பயங்கரவாதி"களால் தாக்கப்பட்டார்கள். பல்லாயிரம் முஸ்லிம்கள் உயிரிழந்தார்கள்; பல்லாயிரம்பேர் உடைமைகளை இழந்தார்கள்; பன்னிரண்டு லட்சம் பேர் உறைவிடத்தையும் தங்களுக்குரிய எல்லாவற்றையும் இழந்து அண்டையில்உள்ள அராபிய நாடுகளில் தஞ்சம் புகுந்தார்கள்... இந்தக் கொடுமையை நினைத்தால், 1947-ல் இந்தியப் பிரிவினையின் போது ஏற்பட்ட கொடுமை சாதாரணமானது என்றே சொல்லவேண்டும்.

அய்க்கிய நாடுகள் சபை என்று ஒன்று இருக்கிறது. உலகப் பொதுப்பிரச்சினைகளைத் தீர்ப்பது அதன் வேலை. ஆனால் பாவம், அந்தச் சபையின் நிலை வெகு பரிதாபம். இரண்டு பெண்டாட்டிக்காரன் மாதிரி, அமெரிக்கக் கும்பலுக்கும் ருஷ்யக் கும்பலுக்கும் இடையில் அகப்பட்டுக் கொண்டு, செய்யவேண்டிய முக்கியமானதை மட்டும் செய்யாமல், மற்றெல்லாவற்றையும் அது செய்து வருகிறது!...

"இந்தப் பன்னிரண்டு லட்சம் அகதிகளின் பிரச்சினையைத் தீர்க்கவேண்டியது இஸ்ரேலின் பொறுப்பு" என்று அய். நா. சபை தீர்மானம் நிறைவேற்றியது;

இந்த இருபது ஆண்டுகளில் அதை மீண்டும் மீண்டும் உறுதிசெய்து இஸ்ரேலைப் பலமுறை நினைவூட்டியும் வந்துள்ளது. ஆனால் ஆங்கில, அமெரிக்கச் சிவ பெருமான்களின் கழுத்தில் கிடக்கிற பாம்பாகிய இஸ்ரேல் அய். நா. தீர்மானத்துக்கு இன்று வரை செவிசாய்க்கவில்லை; பன்னிரண்டு லட்சம் பரிதாபத்துக்குரிய மக்களின் கண்ணீரைத் துடைக்கும் எண்ணமே அந்த "ஷைலக்" நாட்டுக்கு இல்லை. அதுமட்டோ? இந்தப் பிரச்சினைக்குத் தீர்வுகாண்பதற்காக இஸ்ரேல் நாட்டுக்கு அனுப்பி வைக்கப்பட்ட அய். நா. பிரதிநிதியையும் இஸ்ரேல் "பயங்கரவாதிகள்" கொன்றுவிட்டார்கள்! இந்தப் படுகாலிக் குழந்தையைத் தட்டி அடக்குவதற்குத் துணிவும் வலுவும் இல்லாத அய்க்கிய நாடுகள் சபை, தீர்மானம் நிறைவேற்றிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறது.

இந்தப் பன்னிரண்டு லட்சம் அகதிகளும், இந்த இருபது ஆண்டுகளில் பிறந்த பரிதாபத்துக்குரிய அவர்களின் பரம்பரையினரும் வடிக்கின்ற கண்ணீரைக்கண்டு கொதித்தெழுந்த அரபுநாடுகள் இஸ்ரேல்மீது போர் தொடுத்துவிட்டனவோ என்றால், அதுவும் இல்லை. "ஏசுகிறிஸ்துவின் காலத்துக்கு முன்பு தங்கள் நாடு எவ்வளவு பரப்பளவு இருந்ததோ அந்த அளவுக்கு இன்று அதை விரிவுபடுத்திவிடவேண்டும்" என்று திட்டம் தீட்டி வைத்துக்கொண்டு, தன் பீரங்கியை அரபுநாடுகளுக்கு எதிராகத் திறந்தது இஸ்ரேல். ஓடுகிறவனைக் கண்டால் விரட்டுகிறவனுக்குக் கொண்டாட்டம் என்பார்கள். அதுபோலவே, அய். நாவுக்கு ஆற்றலில்லை என்றும் அராபியருக்கு ஆயுதபலம் இல்லை என்றும் கண்டுகொண்ட இஸ்ரேல் துள்ளிவிளையாடுகிறது.

இந்தச் சூழ்நிலையில்தான் இந்தியாவின் கொள்கையைக் கவனிக்கவேண்டும். நடுநிலை என்பது தாக்குகிறவனுக்கும் தாக்கப்படுகிறவனுக்கும் மத்தியில் நின்று வானத்தைநோக்கி உபதேசம் செய்வதல்ல; நீதியின்பக்கம் நின்று அதை நிலைநாட்ட முயல்வதே நடுநிலைக் கொள்கை. சண்டைக்காரர்களில் குற்றவாளி யார் என்று திட்டவட்டமாகத் தெரியாதபோதுதான் இரண்டுபக்கமும் சேராமல் இருக்கவேண்டும்; குற்றவாளி எவன் என்று தெரியும்போது, பாதிக்கப்பட்டவனுடன் சேர்ந்தே நடுநிலையைக் காக்கவேண்டும். அதைத்தான் இந்தியா செய்கிறது.

எதிர்த்தரப்பினரின் மற்றொரு குற்றச்சாட்டுக்கும் இதிலேயே பதில் அடங்கியிருக்கிறது: பன்னிரண்டு லட்சம் மக்களின் கண்ணீரைத் துடைக்கவேண்டிய பொறுப்பைச் சற்றும் உணராத ஒருநாடு, வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவதுபோல, மேலும் தனது நாட்டை விரிவுபடுத்தத் திட்டம் தீட்டுமானால், அதை ஒழித்துவிடவே அண்டை அரசுகள் முந்தினாலும் அதில் தவறு ஒன்றும் இல்லை. ஆனால் இங்கே அப்படி ஒன்றும் நடந்துவிடவில்லை. "தலைவலி அதிகமாக இருந்தால் கடிக்கும் செருப்பைக் காலிலே மாட்டிக்கொண்டு நட" என்பார்கள். அதுபோல, தனது பழைய பெருங்குற்றத்தைச் சிறிது பண்ணுவதற்காகப் புதிதாக ஒரு மாபெரும் குற்றத்தைப் புதிய முந்தியது இஸ்ரேல், பாதிக்கப்பட்டவர்கள் அதைத்தடுக்க முந்துவது இஸ்ரேலின் உரிமையை நசுக்குவதாகுமா? தன்னுடைய எல்லையில் தன் சுதந்திரத்தை நிலைநாட்டும் வரைதான் அது நாடு; அதற்கு அப்பால் உரிமை கொண்டாடுவது ஆக்கிரமிப்பு. அதை அடக்க முயல்வது அதன் உரிமைமீது கைவைப்பதாகாது.

அரபு நாடுகளுக்கு எதிராக, வெளிப்படையாகக் கூறப்படும் காரணங்களெல் வெறும் திரைச்சீலைதான். அதற்கு உள்ளே உண்மையான வேறு காரணம் இருக்கிறது: அரபு நாடுகள் யாவும் இஸ்லாமியநாடுகள். அவை அனைத்தும் ஒன்றுபட்டு வளர்ச்சி பெற்றால், இன்றைய வல்லரசுகளின் சிம்மாசனம் ஆட்டம் கொடுக்கும். ஒன்றுபட்டு வலிமை பெற்றுவிட்டால், 'உலகக் கொடி' நாட்ட வேண்டுமென்ற எண்ணம் இஸ்லாமியருக்கு ஏற்படும் என்பதும் இயல்பே. (இன்றைக்கும் உலகிலுள்ள 75 கோடி முஸ்லீம்களைத் தானே ஒவ்வொரு முஸ்லீமும் தன் சொந்தக்காரர்களென்று சொல்லுகிறான்.) எனவே இஸ்லாமியக்கூட்டு வலுப்பெற்றால் உலகுக்கு வேறொரு ஆபத்து இருக்கவே இருக்கிறது. ஆனால், அனைத்தும் இழந்து அனாதைகளாகத் திரியும் பன்னிரண்டு லட்சம் மனித உயிர்களின் கண்ணீரைத் துடைக்காவிட்டால், அந்த ஆபத்து விரைவிலே அல்லவா வந்துவிடும்! அடிமேல் அடியடித்து, அவர்களை அழுது கண்ணீர் சிந்தச் செய்வதால் ஏகாதிபத்தியவாதிகளின் தலையில் வெகு விரைவிலே அல்லவா இடி விழுந்துவிடும்! அந்த ஆபத்தை, முடிந்தால் தவிர்க்கவும் முடியாவிட்டால் தள்ளிப்போடவும் முந்த வேண்டியதே நடுநிலை நாடுகளின் கடமை.

இந்தப் பின்னணியையும் பின் விளைவுகளையும் உணராதவர்கள் பன்னிரண்டு லட்சம் அகதிகளின் பரம்பரையினர் வடித்துவரும் கண்ணீருக்கு உருகும் மனிதாபிமான நெஞ்சமாவது பெற்றிருக்கவேண்டும். அதுவும் இல்லை என்றால், அவர்களின் குரலையும் பேனாவையும் வேறேதோ பின் நின்று இயக்குகிறது என்பதே பொருள். அது எது என்பதை எல்லாரும் அறிந்தே இருக்கிறார்கள். பூனை கண்ணை மூடிக்கொண்டால் உலகமே இருண்டுபோகுமா?...

## நில உச்சவரம்பு சட்டம்

நில உச்சவரம்புச் சட்டம் அமுலுக்கு வந்தபிறகு 20 லட்சம் ஏக்கராவுக்கு மேல் உபரியாக இருக்கின்றன என்று கண்டுபிடிக்கப்பட்டது. இந்த உபரி நிலங்கள் தற்போது நிலமில்லாத விவசாயிகளுக்கு வினியோகிக்கப்பட்டு வருகின்றன. கிடைத்துள்ள தகவல்களின்படி தமிழ் நாட்டில் 24,136 ஏக்கராக்கள் உபரியாக இருக்கின்றன என்று தெரிகிறது. இதுவரை உச்ச வரம்புச் சட்டத்துக்குமேல் உபரியாக இருந்த நிலங்களில் 10 லட்சம் ஏக்கராக்கள் வினியோகிக்கப்பட்டுவிட்டன. மிச்சமுள்ள பகுதிகளில் விவசாய ஊழியர்களுக்குத் தற்காலிகமாகக் குத்தகைக்கு விடப்பட்டிருக்கின்றன. இவற்றின் வினியோகம் பிறகு தீர்மானிக்கப்படும். நாகாலண்ட் தவிர மற்ற எல்லா ராஜ்யங்களிலும் நில உச்சவரம்புச் சட்டம் அமுலில் இருக்கிறது.

# கருத்திருமன்

வேளாண்மைக்கும் அரசியலுக்கும் என்ன உறவு? அரசியலுக்கும் செய்யுளுக்கும் என்ன தொடர்பு? ஒன்றுமில்லை என்றே தோன்றும். ஆனல் தமிழகச் சட்டமன்றத்தில் எதிர்க்கட்சி (காங்கிரஸ்) தலைவராகப் பணியாற்றும் பி. ஜி. கருத்திருமன் மேலே சொன்ன மூன்று துறைகளோடும் ஒரே சமயத்தில் உறவாடுபவர். இது அரிதல்லவா?

அவரது இந்த மூவகைக் காதல் காரணமாகத்தான் போலும், அண்மையில் அவர் அமெரிக்கா சென்றிருந்தபோது சந்தித்த மக்களையெல்லாம் அவர் கவர்ந்தார். அவரது கம்ப ராமாயண விரிவுரைகளும், ஆழ்ந்த வேளாண்மை அறிவும், அரசியல் தகுதியும் பலவகைப்பட்ட அமெரிக்க மக்களுடன் அவர் நெருங்கிய உறவுகள் கொள்ளத் துணை செய்தன.

கம்பனின் கவிச் சிறப்புக்களை அவர் அந்நாட்டு மக்கள் உணருமாறு செய்தார்; அமெரிக்க ஆலைகள், பண்ணைகளின் திறமையையும் உற்பத்தி ஆற்றலையும் தாம் உணர்ந்தார். தொன்மையான இந்திய நாட்டுக் கருத்துக்களுக்கும் தத்துவங்களுக்கும் புதுமையான விஞ்ஞான நாட்டின் அறிவையும் அனுபவத்தையும் மாறு கொண்டார்.

இவ்வாறு தொடங்கிய உறவு, பயனுள்ள பலன்களை விளைவித்த வண்ணம் வளர்ந்து வருகிறது. ஈரோட்டிலிருந்து 30 மைல் தொலைவில் நஞ்சைப் புளியம்பட்டியிலுள்ள தமது குடும்பப் பண்ணைக்குச் சென்ற ஆண்டு இறுதியில் கருத்திருமன் திரும்பி வந்தவுடன் அமெரிக்காவில் அர்க்கான்ஸாஸ் மாநிலத்தில் அவரை விருந்தாளியாக ஏற்று உபசரித்த ஒருவர் 5 கிலோ நெல் விதை கொண்ட ஒரு பொட்டலத்தை அனுப்பி வைத்தார். ஸ்டட்கர்ட் என்னுமிடத்திலுள்ள அந்த அமெரிக்கரது பண்ணைக்குக் கருத்திருமன் சென்றிருந்தபோது பார்த்து பாராட்டிய



நெல் வகை இது; விளைச்சலுக்குப் பேர் போனது.

கவியன்பருக்கு 50 ஏக்கர் குடும்பப் பண்ணை உண்டு. அவர் அதில் நெல்லும் தோட்டப் பயிர்களும் சாகுபடி செய்து வந்தார். அரை ஏக்கர் நிலத்தில் அமெரிக்க நெல்லை விதைத்து, நீர் பாய்ச்சி, உரமிட்டுக் கண்ணுங் கருத்துமாகக் காத்தார், கருத்திருமன். சென்ற மே மாதத்தில் அதை அவர் அறுவடை செய்தபோது, 2000 கிலோ மகசூல் கிடைத்தது. அவர் பயிரிட்ட அமெரிக்க நெல் வித்துக்கு 'புளுபெல்' என்று பெயர்.

இது போன்ற அமோக விளைச்சல் பெரும்பாலான இந்தியப் பண்ணைகளுக்கு அபூர்வமே; எனினும் கருத்திருமன் நிலத்தில் இந்த மகசூல் கிடைப்பது முதல் தடவையல்ல. அமோக விளைச்சலுக்காக அவர் பல தடவை பரிசுகள் பெற்றுள்ளார். அவர் முற்போக்கான முறையில் வேளாண்மை செய்து வருகிறர். புதிய முறைகளையும் கண்டுபிடிப்புகளையும், கையாண்டு விளைச்சலைப் பெருக்கியுள்ளார். அவருக்குக் கிடைத்த மகசூல், இந்தியாவில் அருமையே; ஆனல் அமெரிக்காவில் அது சாதாரணம். நாடு முழுதும் ஒன்றுபோல இவ்வாறு அமோக விளைச்சல் இருப்பதுதான் அமெரிக்க நாட்டு வேளாண்மை வளமைக்குக் காரணம்.

அர்க்கான்ஸாஸ், டெக்ஸாஸ், அரிஸோனு, கலிஃபோர்னியா மாநிலங்களிலுள்ள பல பண்ணைகளுக்கும் கருத்திருமன் சென்றிருந்தார். 'நன்கு விவரம் தெரிந்த குடியானவர்கள் தாமே உழைத்துப் பாடுபட்டுக் கண்ணுங் கருத்துமாக விஞ்ஞான முறையில் சாகுபடி செய்கிறர்கள்' என்று அமெரிக்க வேளாண்மை பற்றிக் கருத்திருமன் குறிப்பிட்டார்.

ஆங்காங்கு நடைபெறும் ஆராய்ச்சி, அமெரிக்க வேளாண்மைக்குப் பெரும் நன்மை செய்கிறது என்று அவர் கூறுகிறர். உரம், புது வித்துகள், பூச்சி கொல்லி மருந்துகள், நீர்ப்பாசனம் முதலியவற்றைப் பயன்படுத்துவது குறித்துக் குடியானவர்களுக்கு இடையருமல் புத்தம் புதுத் தகவல்களும் ஆலோசனைகளும் கிடைத்து வருகின்றன என்றுர். 'குறித்த பலன் தராத நெல் அல்லது கோதுமை வகைகள் உடனுக்குடன் கைவிடப்பட்டு, புதிய வகைகள் புழக்கத்துக்கு வருகின்றன. நில வள ஆராய்ச்சி முதலிய வசதிகள் உடனே கிடைக்கின்றன. பல வகைத் தகவல் தொடர்பு முறைகள் வழியாகக் குடியானவர்களுக்குத் தகவல்களும் ஆலோசனைகளும் வழங்கப்படுகின்றன' என்றுர், தமிழன்பர், கருத்திருமன்.

அமெரிக்கக் குடியானவர்களுக்கு நல்ல சேமிப்பு வசதிகளும், விற்பனை வாய்ப்புகளும் இருப்பதும் தமிழகச் சட்டமன்ற உறுப்பினரைப் பெரிதும் கவர்ந்தது. அரசாங்க உத்ரதவாதங்கள் பயிர் இன்ஷ்யூரன்ஸ் திட்டங்கள் ஆகியவற்றின் மூலம் விளை பொருட்களுக்கு ஒரு நிலையான விலை கிடைக்கும் உறுதி இருக்கிறது; நியாயமற்ற விலை ஏற்றத் தாழ்வுகள் இல்லை. 'நடுவாந்திரர்கள்' இல்லாமல் குடியானவர் தமது உற்பத்தியை விற்பனை செய்யக் குடியானவர்கள் மார்க்கெட் வசதியான வாய்ப்பு. குளிர்ப் பாதுகாப்பு முதலிய முறைகள் மூலம் உணவுப் பண்டங்கள் நன்கு பாதுகாக்கப்படுவதையும் வீண் சேதாரம் தவிர்க்கப்படுவதையும் கருத்திருமன் கண்டார்.

[6-ம் பக்கம் பார்க்க]





| | | |
|---|---|---|
| மலர் : 32 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தொறும் | 1967 |
| இதழ் : 35 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | ஜூலை : 23 |


# பஸ் அதிபர்கள் மகாநாடு

பஸ் போக்குவரத்தை அரசாங்கம் மேற்கொள்ளும் என்று பதவி ஏற்குமுன்பே திரு. அண்ணாதுரை அறிவித்தார். அதை ஒட்டி இப்பொழுது 75 மைல் போக்குவரத்தை அரசாங்கம் உடனே மேற்கொள்ள விருக்கிறது.

இதில் பஸ் அதிபர்களுக்கு நஷ்ட ஈடு தரப்போவதில்லையென்றும் அவர்களுடைய பஸ்களை அரசாங்கம் வாங்கப் போவதில்லை என்றும் முரட்டுத் தனமான கருத்துக்கள் வெளியிடப்பட்டன.

பஸ்காரர்கள் பெரும்பாலோர் காங்கிரஸ் கட்சியை ஆதரித்தார்களென்றும் அவர்களைப் பழிவாங்கவே தி. மு. க. அரசாங்கம் இந்த நடவடிக்கையை மேற்கொண்டுள்ளதோ என்றும் ஐயமும் திகிலும் பரவலாக இருந்து வந்தன.

தொழில்களைத் தேசீய மயமாக்கும் கொள்கை புதிதல்ல. ஏற்கெனவே சென்னையில் அரசாங்கம் பஸ்போக்குவரத்தை நடத்திவருகிறது. நெடுந்தொலைப் போக்குவரத்தையும் அரசாங்கம் வெற்றிகரமாக நடத்திவருகிறது. இவ்வளவும் பழைய காங்கிரஸ் அரசாங்கமே மேற்கொண்ட நடவடிக்கைகள்தாம். இப்போது தி. மு. க. அரசாங்கமும் அந்தக் கொள்கையையே மேலும் விஸ்தரிக்கிறதேயன்றி, பஸ் அதிபர்களைப் பழிவாங்கவே இந்த நடவடிக்கையென்று கருதுவது சரியில்லை.

சென்னையில் நடைபெற்றுள்ள பஸ் அதிபர்கள் மகாநாடு அரசாங்கத்துக்கு நேசக்கரம் நீட்டி, உணர்ச்சி பூர்வமாக இல்லாமல், தெளிந்த சிந்தனையுடன் சிறந்த கோரிக்கைகளை உருவாக்கியிருக்கிறது.

அரசியல் உள்நோக்கத்துடன் தி. மு. க. அரசு பஸ் போக்குவரத்தை மேற்கொள்கிறது என்ற கருத்தை பஸ் அதிபர்களின் சென்னை மகாநாடு ஏற்றுக்கொள்ளவில்லை. தொழில்களை அரசாங்கம் மேற்கொள்ளும் கொள்கை புதிதல்லவென்றும், சென்னை நகரிலும். மற்றும் நெடுந்தொலைப் போக்குவரத்திலும் காங்கிரஸ் அரசாங்கம் முன்பிருந்து நடந்துவரும் மரபை ஒட்டியே தி. மு. க. அரசாங்கம் இப்பொழுது மேலும் ஒரு அடிமுன் வைத்திருக்கிறதேயன்றி, அரசாங்கத்தின் நோக்கத்திற்கு உள்வயணம் கற்பிப்பது கூடாது என்றும் பஸ் அதிபர்கள் உணர்ந்திருப்பது பாராட்டுதற்குரியது.

மாறிக்கொண்டிருக்கும் சமுதாய அமைப்பில் அரசாங்கத்தின் தேசீய மயக்கொள்கையை ஆதரிக்க வேண்டியது பொதுநலனுக்கு உகந்தது என்றும் பஸ் அதிபர்கள் தெளிவாகச் சிந்தித்து ஒப்புக்கொண்டுள்ளது, பஸ் அதிபர்களின் சரியான பார்வைக்கு எடுத்துக்காட்டாகும்.

மகாநாட்டின் தலைவர் திரு ஆர். கிருஷ்ணசாமி ரெட்டியார் தமது தலைமையுரையில் பஸ் அதிபர்களின் கொள்கையை ஐயந்திரிபற விளக்கியதுடன், தேசீயமயமாக்குவதன் விளைவாக பஸ்அதிபர்கள் பாதிக்கப்படாமலும் அரசாங்க முயற்சி வெற்றிபெறவும், எல்லாப்பிரச்னைகளையும் ஆராய்ந்து முடிவுசெய்ய அரசாங்கம் ஒரு விசாரணைக் குழுவை அமைக்கவேண்டுமென்றும்கோரி ஒரு தீர்மானம் நிறைவேற்றத் தூண்டியிருப்பது, தமிழ்நாடு அரசாங்கத்தின் சிந்தனையைக் கவரும்.

பஸ் அதிபர்களைப் பொருட்படுத்தாமல் அரசாங்கம் தன் கொள்கையைத் தீவிரமாக நிறைவேற்றுமென்று கூறிவந்த தமிழ்நாடு அரசாங்கம், இப்பொழுது பஸ் அதிபர்களின் நலனைப் புறக்கணிக்காதென்றும், தேசீயமயக் கொள்கை வெற்றிபெற பஸ் அதிபர்களின் ஆலோசனைகளையும் அரசாங்கம்பெறும் என்றும் முதலமைச்சர் கூறியிருப்பது, அரசின் நடைமுறைகள் நேர்மையாகவே இருக்குமென்பதற்கு அடையாளம்.

பல்லாண்டுகள் போக்குவரத்துப்பணியில் உழைத்து வரும் பஸ் அதிபர்கள் அரசியல்நோக்கங்களுக்காகப் பழிவாங்கப்படவேண்டுமென்று அரசாங்கம் ஒரு நாளும் நினைக்கமுடியாது. அதேபோல் அரசாங்கத்தை நடத்தும் ஒரு கட்சியின் ஆட்சிக்கு முட்டுக்கட்டை போடும் நோக்கம் பஸ் அதிபர்களுக்கும் இருக்கமுடியாது. இந்தத் தெளிவுதான் சென்னை மாநாட்டின் சிறந்த விளைவு,

இனி அரசும் பஸ் அதிபர்களும் கூடி ஆலோசித்து சம்பந்தப்பட்ட நலன்கள் அனைத்தும் பாதுகாக்கப்படும் சூழ்நிலை ஏற்பட்டிருப்பதை வரவேற்கிறோம்.

# கல்வி ஒலிபரப்புகள்

கேள்வியின் பயன் பற்றியும், செவிப் புலத்தின் மாண்புபற்றியும் திருவள்ளுவர் தெள்ளத் தெளியக் கூறியிருக்கிறார். கேள்வியினால் பெரும் அறிவின் சிறப்பை இன்று, வானொலிப் பெட்டி வைத்திருப்பவர்கள் நன்கு அறிந்திருப்பார்கள். குழந்தைகளின் கல்வி அறிவில் வானொலித்துறை செலுத்தும் பெரும் அக்கறையை விவரிப்பது மிகையாகாது. பள்ளிச் சிறுவர்கள், விஞ்ஞானம், வரலாறு, பூகோளம், இன்னும் பல பாட விஷயங்களில் தங்கள் அறிவை விருத்தி செய்துகொள்வதற்கு உதவியாக சென்னை, திருச்சி வானொலி நிலையங்கள் தினந்தோறும் பகலில் கல்வி நிகழ்ச்சிகளை ஒலிபரப்பி வருகின்றன. இந்தக் கல்வி ஆண்டில் ஜூலை 10-ந் தேதி முதல் இந்த ஒலிபரப்புகள் துவங்கியிருக்கின்றன.

தமிழ் நாட்டில் சுமார் 1500 ஆரம்பப் பள்ளிகள், உயர் நிலைப் பள்ளிகளில் பயிலும் சுமார் 5 லட்சம் மாணவர்கள் தற்போது இந்த கல்வி ஒலிபரப்புக்களினால் பயன்பெற்று வருகிறார்கள். பள்ளிகளுக்கான ஒலிபரப்புகள் துவக்கப்பட்டு 30 ஆண்டுகள் ஆகின்றன. அப்போது 27 பள்ளிகள் தாம் ரேடியோ ஒலிபரப்பும் கல்வி நிகழ்ச்சிகளைக் கேட்பதற்காக நேரம் ஒதுக்கின. ஆனால் கடந்த ஏழு ஆண்டுக்காலத்தில் கிட்டத்தட்ட 900 பள்ளிகள் வானொலி நிகழ்ச்சிகள் கேட்பதற்கு ஏற்பாடுசெய்து இந்தத் திட்டத்தில் பங்கு கொண்டன என்பது குறிப்பிடத்தக்கது.

இதற்கான ரேடியோ பெட்டிகளை பள்ளிகள் மாணவர்களிடமிருந்து பணம் வசூலித்து அதன் மூலமே வாங்கிவருகின்றன. நடுத்தர பள்ளி மாணவன் ஒரு ரூபாயும், உயர்நிலைப் பள்ளி மாணவன் இரண்டு ரூபாயும் செலுத்துகிறார்கள். பொதுமக்களும் நன்கொடையாக வானொலிப் பெட்டிகளைப் பள்ளிகளுக்கு வழங்கி உதவுகிறார்கள். பஞ்சாயத்துக்களின் செட்டுகளும் சில சமயங்களில் பள்ளிகளுக்குப் பயன்படுவதுண்டு.

சில குறிப்பிட்ட துறைகளில் விசேஷ பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் கிடைக்காமலிருக்கும் இடங்களில் இந்தக் கல்வி ஒலிபரப்புகள் ஆற்றுகின்ற பங்கை மிகுத்துரைக்க

முடியாது. சில குறிப்பிட்ட துறைகளில் போதிப்பதற்குத் தேர்ந்த ஆசிரியர்களைப் பெற்றிராத பள்ளிகளுக்கு அந்த வாய்ப்பை உவந்து தருகிறது வானொலி. இந்த ஒலிபரப்புகளைப் பள்ளியிலுள்ள எல்லா மாணவர்களும் ஒரே சமயத்தில் கேட்கவேண்டுமென்பதில்லை. வகுப்புவாரியாகத்தான் கல்வி நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்படுகின்றன அந்தந்த வகுப்பு மாணவர்கள் மட்டும் நிகழ்ச்சிகளைக் கேட்கச் செய்தால்போதும். ஆறாவது, ஏழாவது வகுப்புகளுக்காக ஒலிபரப்பப்படும் நிகழ்ச்சிகள் அவற்றின் பாட புத்தகங்களுடன் சம்பந்தப்பட்டவையாகத்தான் தயாரிக்கப்படுகின்றன. விஞ்ஞானம் பற்றியும், மற்ற துறைகள் பற்றியுமான ஒலிபரப்புகளும் பாடத்திட்டத்துக்கு ஏற்றவாறே அமைந்திருக்கின்றன.

மாணவர்கள் இந்த நிகழ்ச்சிகளை நன்கு புரிந்து கொள்வதற்கு உதவி செய்வதில் ஆசிரியர் முக்கிய பங்கு ஆற்றுகிறார். அத்துடன் மட்டுமின்றி, இந்த நிகழ்ச்சிகள்பற்றிய மதிப்பீட்டு அறிக்கைகளை அவ்வப்போது நிலையத்துக்கு அனுப்பி, இந்த நிகழ்ச்சிகளை இன்னும் திறம்பட தயாரிப்பதற்குப் அவர் பேருதவி புரிகிறார்.

பள்ளி விடுமுறைக் காலத்தில் கல்வி ஒலிபரப்புகள் நிறுத்தப்படுகின்றன. படிப்பை முடித்து வெளியேறும் மாணவன் தகுந்த தொழிலை மேற்கொள்வதற்கு வழிகாட்டியாக பல நிகழ்ச்சிகள் அந்தச் சமயத்தில் ஒலிபரப்பப்படுகின்றன. இந்த ஆண்டில், எல்லா வேலை நாட்களிலும் தினமும் பகல் 12.30 மணி முதல் ஒருமணி வரை கல்வி நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்படுகின்றன. உங்கள் குழந்தைகள் இன்று வானொலியில் பாடம் கேட்டார்களா?

---

# பிரிட்டனில் இந்திய மாணவர்கள்

இங்கிலாந்தில் பயிலும் வெளிநாட்டு மாணவர்கள் சிலருக்கு, கோடை விடுமுறைக்காலத்தில்வேளாண்மைப் பயிற்சியளிக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். கரம்பு நிலத்தை உழுது பயிரிடுவதற்கான நவீன உத்தி முறைகளை எடுத்துக் கூறுவதே இந்தப் பயிற்சியின் முக்கிய நோக்கம். ரோஸன்டேல் ரோடரி கிளப்பும் பிரிட்டிஷ் கௌன்சிலும் சேர்ந்து, பிரெஸ்டனுக்கு அருகிலுள்ள லங்காஷயர் கவுண்டி இன்ஸ்டிட்யூட் ஆல் அக்ரிகல்சர் என்ற கழகத்தில் நாளது ஜூலை மாதம் 10-16 தேதிகளில் ஏற்பாடு செய்த பயிற்சி முகாமில் இந்தியாவைச் சேர்ந்த திரு. எஸ். கே. சன்யால், திரு. பி. சங்கர், திரு. எல். பி. பாண்டே ஆகியோரும் பிறநாடுகளைச் சேர்ந்த சிலரும் கலந்துகொண்டனர் திரு. சன்யால் கல்கத்தாவைச் சேர்ந்தவர்; பெர்மிங்ஹாம் பல்கலைக் கழகத்தில் பெட்ரோலிய உற்பத்திப் பொறியியல் துறையில் பயிலுகிறார். திரு. பி. சங்கர் பஞ்சாபைச் சேர்ந்தவர், பெர்மிங்ஹாம் பல்கலைக்கழகத்தில் வானிலை ஆராய்ச்சிப்பிரிவில் பயிலுகிறார். திரு. எல். பி. பாண்டே கோரக்பூரைச் சேர்ந்தவர்; லண்டன் பல்கலைக்கழக மாணவர்.

தம்தம் நாடு திரும்பி பொறுப்பான பதவி வகிக்கக்கூடிய இந்த மாணவர்கள், வேளாண்மைத் துறையில் பரிச்சயம் பெற்றால், எதிர்காலத்தில் அவர்கள், உணவு உற்பத்தியை அதிகரிக்கும் முயற்சிக்கு சிறப்பாக உதவக் கூடும் என்பது வேளாண்மைப் பயிற்சி முகாமை ஏற்பாடு செய்தவர்களுடைய கருத்தாகும்.

---



## அமுத வாக்கு

திருவளர் வாழ்க்கை, கீர்த்தி,
தீரம், நல்லறிவு, வீரம்
மருவுபல் கலையின் சோதி,
வல்லமை யென்ப வெல்லாம்
வருவது ஞானத்தாலே.

## புதிய ரக டெலி:போன்

டெலிஃபோனை கையி லெடுத்து ஆளமுடியாமல் ஊனமுற்றவர்களுக்கு பயன் படும் முறையில் டெலிஃபோனை, லீட்ஸ் காலேஜ் ஆவ் ஆர்ட் என்ற கல்லூரியில் பயிலும் 21 வயதுடைய திரு. டேவிட் பிரௌன் அமைதிருக்கிறார். புதிய ரக டெலிஃபோன் கருவியில் ஓர் அட்டைத் தகடு இருக்கிறது. அதை அழுக்கினால், டெலிபோன் இயங்குகிறது. விளிப்பவர் குரலைக் கேட்க முடிகிறது. விரல்கள் இல்லாதவர்கள் வாயில் ஓர் பென்சிலை கடித்துக்கொண்டு அல்லது கால் விரல்களில் பென்சிலை இடுக்கிக் கொண்டு, அந்தப் பென்சிலை, அட்டை தகட்டின் மீது வைத்து அழுக்கினால், அதிலுள்ள ஓர் அம்புக்குறி சுழலத் தொடங்கும். அம்புக்குறியை சுற்றிலும் வட்டமாக எண்கள் உண்டு. ஒரு எண்ணுக்கு எதிராக அம்பு முனை திருப்பும்போது அட்டை தகட்டை மீண்டும் அழுத்தவேண்டும், இப்படி விரும்பும் டெலிஃபோன் என் கிடைக்கும் வரையில் அட்டை தகட்டை அழுத்தினால், எதிராளியுடன் தொடர்புகொள்ள முடியும்.

——

[3-ம் பக்கத் தொடர்ச்சி]

பால் பண்ணை, கோழிப் பண்ணை, பன்றிப் பண்ணை ஆகியவற்றை நடத்தப் போதிய வாய்ப்புகளுடன் கால்நடைப் பாராமரிப்பு அமெரிக்காவில் சீரான முறையில் வளர்ந்து வருவதாக அவர் தெரிவித்தார். கால்நடைத் தீவனங்களைப் பெருவாரியாக உற்பத்தி செய்து மலிவான விலைகளுக்கு விற்கிறார்கள். கால்நடை வைத்தியப் பணி நினைத்த நேரத்தில் கிடைக்கிறது. 'மக்களைப் போலவே மிருகங்களையும் நன்கு கவனிக்கிறார்கள்' என்கிறார்.

டென்னஸி பள்ளத்தாக்கு நிலைய (டி. வி. ஏ.) அமைப்புக்களை யெல்லாம் விரிவாகச் சுற்றிப் பார்த்த கோவைக் குடியானவர், இணைப்பான வளர்ச்சித் திட்டம் ஒன்றின் மூலம் அந்தப் பகுதி முழுவதும் அப்படியே செல்வம்கொழிக்கும் சீமையாக மாறியுள்ளதைக் கண்டு வியந்தார்.

அணு விசையின் அமைதிப் பணிகளும் அவரைப் பெரிதும் கவர்ந்தன. குறிப்பாக, நிலத்திலும் பயிர்களிலும் உள்ள குறைபாடுகளைக் கண்டறிவதிலும்; உரங்கள் பூச்சி கொல்லிகள் ஆகியவற்றை எவ்வளவு பயன்படுத்தலாம் என்று கண்டறிவதிலும் விவசாயத் துறையில் அணு ஆற்றி வரும் பணிகளை அவர் பாராட்டினார்.

தமிழ் இலக்கியம், தமிழர் சிந்தனை ஆகியன குறித்துக் கருத்திருமன் பல கூட்டங்களில் பேசினார். வந்திருந்தோர் ஆர்வத்துடன் கேட்டு மகிழ்ந்தனர். கூட்டங்கள் முடிந்த பின்பு, அவருடன் உரையாடினர்.

1962 முதல் ஒரு ஐந்தாண்டுக் காலம் நீங்கலாக -இக் காலத்தில் அவர் இந்தியச் சட்டமன்ற உறுப்பினராக இருந்தார். 1952 முதல் அவர் தமிழகச் சட்டமன்ற உறுப்பினராக இருந்து வருகிறார். சென்னை, மாநிலக் கல்லூரியில் தாவர இயல் - விலங்கியல் படித்து, பி. எஸ்ஸி. பட்டம் பெற்றார், இரு ஆண்டுகள் கழித்து, 1942ல் வேளாண்மையில் ஈடுபட்ட அவர், ஊக்கமும் நாட்டமும் கொண்டு உற்பத்தியைப் பெருக்கி வருகிறார். அவரே ஒரு கவிஞர்; இலக்கிய அறிஞர். 12-வது நூற்றாண்டில் வாழ்ந்த கவிச் சக்கரவர்த்தி கம்பர் இயற்றிய ராம கதைக்குக் கருத்திருமன் உரை நூல் ஒன்று எழுதியுள்ளார்; 1963-ல் இது வெளியாயிற்று.

## சீன ஜலவாயு

கம்யூனிஸ்டு சீனா ஜலவாயு வெடிச்சோதனை நடத்தியதன் விளைவுபற்றி சில உறுப்பினர்கள், இது சம்பந்தமாக சர்க்கார் நடவடிக்கைபற்றி காமன்ஸ் சபையில் கேள்வி கேட்ட போது, பிரதம மந்திரி ஏற்ற முறையில் விடையளித்தார்.

சீன வெடிச்சோதனைகளால் உலக அமைதிக்கு ஆபத்து ஏற்படும் என்பதை ஏற்றுக் கொள்கிறீர்களா, இது சம்பந்தமாக இந்தியா, ஆஸ்திரேலியா போன்ற காமன்வெல்த் அரசுகளைக் கலந்தாலோசித்தீர்களா என்று திரு. வில்லியம் ஹாமில்டன் கேட்டதற்கு பிரதம மந்திரி பின்வருமாறு விடையளித்தார்: நான் ஆஸ்திரேலியா பிரதம மந்திரியுடன் கலந்துரையாடினேன். இந்தியா அரசுடன் நெருங்கியே தொடர்புகொண்டு, நேரடியாகவும் ஜினீவா மகாநாடு சம்பந்தமாகவும் சிந்தித்து வருகிறோம்.

சீனாவின் வெடிச்சோதனைகளால் உலக அரசியல் நிலைமை மாறியிருப்பதால், படைபலக் குறைப்புப்பற்றி சிந்திப்பதற்காக உலகத் தலைவர்கள் கூடும்முயற்சிக்கு வழியுண்டா என்று திரு. ஜி. ராபர்ட்ஸ் கேட்டபோது, இல்லை என்றும் ஜினீவா மகாநாட்டின்மூலம் முயற்சி செய்வதே சாலச்சிறந்தது என்று நம்புவதாகவும் பிரதம மந்திரி விடையளித்தார்.

சீனா தனித்து நிற்பது தான் உலக அமைதிக்கு ஆபத்து ஆகையால் அதை ஐ. நா. சமுதாயத்தில் சேர்த்துக்கொள்ளும் முயற்சிபற்றிக் கூறமுடியுமா என்று திரு. ராபர்ட்ஸ் கேட்டதற்கு விடையளிக்கும்போது, ஐ. நா. பொதுச் சபைக் கூட்டங்களில் இது பற்றி வற்புறுத்தியும்கூட, பெரும்பாலான நாடுகள், சீனாவை ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை என்றும் பிரதம மந்திரி கூறினார்.

# வேத, வேதாந்த பாடசாலை, பழுவூர்.

## 13—4—67 ஆம் தேதியுடன் முடிவான வருடத்திய ஆதாய வரவு செலவுக் கணக்கு

| செலவுகள் : | ரூ. பை. | ரூ. பை. |
|---|---|---|
| வேதாந்த பாடசாலை சம்பளம், ஸ்டைபெண்டு | | 5,016 99 |
| **வேத பாடசாலை :** | | |
| கனபாடிகள் வகையரு சம்பளம் | 2,113 40 | |
| மாணவர்கள் போஜன செலவு | 1664 27 | |
| பூஜை செலவு | 75 84 | 3,853 51 |
| **வைத்தியசாலை :** | | |
| வைத்தியர் சிப்பந்திகள் சம்பளம் | 2065 00 | |
| மருந்து செலவு | 1289 76 | 3,354 76 |
| **இதர தர்மங்கள் :** | | |
| சமயபுரம் மஹமாயி தண்ணீர் பந்தல் | 177 67 | |
| ஸ்ரீ சங்கர ஜயந்தி | 107 14 | |
| ஸ்ரீ மஹாப்ரதோஷம் | 246 33 | |
| சிவன் கோயில் அன்னுபிஷேகம் | 20 50 | |
| ஸ்ரீ ராமநவமி | 204 00 | |
| வயலூர் ஸ்கந்த ஷஷ்டி வேத பாராயணம் | 15 00 | |
| திருச்சி அத்வைத சபாவிற்கு நன்கொடை | 60 00 | 830 64 |
| **நிர்வாகம், மற்றும் இதர செலவுகள் :** | | |
| வீட்டு வாடகை செலவுகள் | 167 50 | |
| மின்சார செலவு | 102 12 | |
| பிரயாண செலவு | 154 41 | |
| தபால் செலவு | 3 22 | |
| கூவிக் கணக்கு | 119 45 | |
| பிரிண்டிங் அண்ட் ஸ்டேஷனரி | 187 81 | |
| வண்டிச் சத்தம் | 16 07 | |
| தீபாவளி இனும்கள் | 89 25 | |
| இனும்கள் | 25 45 | 865 28 |
| **நெல்லில் பாடு :** | | |
| சேதாரம் ஆனவகையில் | | 351 00 |
| நிலத் தீர்வை சாகுபடி | | 490 54 |
| நிலக் குத்தகை தள்ளுபடி | | 1,121 13 |
| கட்டிட மராமத்து செலவு | | 1,031 43 |
| கோர்ட்டுச் செலவு | | 53 50 |
| புத்தக செலவு | | 5 00 |
| உபகார நிதி (Gratuity) | | 800 00 |
| தேய்மான செலவுகள் | | 58 09 |
| ஆக ரூ. | | 17831 87 |

| வரவுகள் | ரூ. பை. |
|---|---|
| நில வருமானம் | 8,781 68 |
| வட்டி வருமானம் | 1,338 12 |
| டிவிடெண்டுகள் | 3,584 57 |
| தென்னந்தோப்பு குத்தகை | 128 00 |
| சில்லரை வருமானம் | 9 79 |
| நிகர நஷ்டம் | 3989 71 |
| ஆக ரூ. | 17831 87 |

## 13—4—67 ஆம் தேதியில் இருந்தபடியான கையிருப்புச் சீட்டு

| ருணங்கள் | ரூ. பை. | ரூ. பை |
|---|---|---|
| **பாடசாலை நிதி :** | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | 1,12,974 47 | |
| இவ்வருடத்தில் வரவுக்கு மேல் செலவு | 3,989 71 | 1,08,984 76 |
| ஆக ரூ. | | 108984 76 |

| ஆஸ்திகள் | ரூ. பை. | ரூ. பை. |
|---|---|---|
| **நிலங்கள் :** | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | | 25,127 50 |
| **வீடுகள், மனைகள் :** | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | | 15,993 61 |
| **ஆபீஸ் சாமான்கள் :** | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | 176 00 | |
| தேய்மானம் தள்ளுபடி | 152 00 | 24 00 |
| **எலக்டிரிக் பிட்டிங்குகள் :** | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | 1,560 07 | |
| கூடுதல் இவ்வருடம் | 115 59 | |
| | 1,675 66 | |
| தேய்மானம் தள்ளுபடி | 1,247 66 | 428 00 |
| **புத்தகசாலை :** | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | 567 25 | |
| தேய்மானம் தள்ளுபடி | 530 25 | 37 00 |
| **ஆயுதங்கள் :** | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி | | 65 55 |
| **இன்வெஸ்டுமெண்டுகள் :** | | |
| சென்ற கையிருப்புச் சீட்டுப்படி கிரயம் | | 58,298 34 |
| கூடியிருக்கும் வட்டி | | 927 50 |
| நெல் கையிருப்பு | | 1,994 83 |
| **கடன்களும் முன்பணமும் :** | | |
| குத்தகை பாக்கிவசம் | 1,740 60 | |
| வசக்கட்டு | 29 01 | 1,769 61 |
| **ரொக்கமும் பாங்கு கணக்குகளும் :** | | |
| ரொக்கம் | 1,028 61 | |
| திருநிதி பாங்கு | 25 44 | |
| இந்தியன் ஓவர்சீஸ் பாங்கு | 3,264 77 | 4,318 82 |
| ஆக ரூ. | | 1,08,984 76 |

திருச்சிராப்பள்ளி,
தேதி : 8—7—67

கணக்குகள் பார்த்து சரியாக இருக்கிறது.
N. கிருஷ்ணசாமி,
சார்டர்டு அக்கௌண்டெண்ட்

A. V. சுப்ரமணிய அய்யர்,
L. S. பார்த்தசாரதி அய்யர், } டிரஸ்டிகள்
P. V. ராமனுஜ அய்யர்.

# தொத்து நோய்

### வெக்கை

இது பசுக்களையும் எருமைகளையும் தாக்கும் ஒரு கொடிய தொத்து வியாதி. இது வைரஸ் என்னும் கண்ணுக்குத் தெரியாத கிருமிகளால் உண்டாக்கப்படுகிறது. இதனால் பாதிக்கப்பட்ட மாடு முதல் நான்கு, ஆறு நாட்களுக்குத் தீனி தின்னாது, மயிர் சிலிர்த்து நிற்கும், சாணி கஷ்டப்பட்டுப் போடும். இந்நிலையில் மாட்டுக்கு 105-லிருந்து 108 டிகிரி வரையில் ஜுரம் அடிக்கும். பிறகு பேதி ஆரம்பமாகிறது. முதலில் இரத்தம் கலந்தும் பிறகு தண்ணியாகவும் கடைசியில் சீதமாகவும் பேதியாகும். இதற்குள் மாடு மெலிந்து நடக்கும் சக்தி இல்லாது சாய்ந்துவிடும். வாயிலிருந்து எச்சில் ஒழுகும். கண்ணிலிருந்து நீர் தாரை தாரையாக வடியும். இந்தக் கொடிய நோயை வைத்தியம் செய்து குணப்படுத்துவதைவிட வராது தடுப்பதே மேல். இந்த வியாதியால் 40 சதவிகிதம் கால்நடைகள் இறக்கின்றன.

### தொண்டை அடைப்பான்

கால்நடைகளுக்கு வரும் தொத்து நோய்களில் இதுவும் ஒன்று. இது மாடுகளைகளையும் எருமைகளையும் மற்றும் சில காட்டு மிருகங்களையும் தாக்குகிறது. இந்த வியாதி கடுமையான கோடைக்குப் பின் மழை பெய்து விவசாய வேலைகள் ஆரம்பமானபின் கால்நடைகளைத் தாக்குகிறது. இவ்வியாதி கால்நடைகளைத் திடீரெனத் தாக்கி 24 மணி நேரத்தில் கொல்வதாலும் நோய்வாய்ப்பட்ட கால்நடைகளுக்கு மருத்துவம் செய்ய நேரமில்லாது போவதாலும் தடுப்பு ஊசிபோட்டு இந்த நோயிலிருந்து கால்நடைகளை இறப்பதிலிருந்து தடுக்க முடியும்.

### சப்பை நோய்

கால்நடைகளைத் தாக்கும் மற்றோர் கொடிய நோய் இது. இந்த நோயின் விசேஷ அம்சம் யாதெனில் இது திடகாத்திரமான கால்நடைகளை மிகுவாகப் பாதிக்கிறது இந்த நோயும் விவசாய வேலைகள் ஆரம்பித்தபின் அதாவது மழை பெய்து ஆற்றில் தண்ணீர் வருதல் முதலிய காலங்களில் கால்நடைகளுக்கு வருகிறது. இந்த நோய் கண்ட கால்நடைகளின் முன் சப்பையோ அல்லது பின் சப்பையோ வீங்கும். அதைக் கையால் அமுக்கினால் மொற மொறவென சப்தம் வரும். மாடு தீனி தின்னாது, தண்ணீர் குடிக்காது. வியாதிப்பட்ட மாடோ எருமையோ கடுமையாக வலியால் அவதிப்படும். இந்த நோயையும் இந்தச் சமயத்தில் கால்நடை மருத்துவரிடம் கொண்டு போனால் காப்பாற்ற இடமுண்டு. ஆனாலும் ஊசி போட்டுக் கொள்வதே சிறந்தது.

### கோமாரி

கால்நடைகளையும் பன்றிகளையும் தாக்கி கால்நடைகளை வேலைசெய்யத் தகுதியற்றவையாகச் செய்யும். இது அதிக சீக்கிரம் பரவக் கூடியது. இக்கொடிய வியாதி பூதக் கண்ணாடிக்கும் புலப்படாத நுண் அணுக்களால் உண்டாகிறது. இந்த நோய் கோடை காலங்களில் அதாவது மே, ஜூன், ஜூலை மாதங்களில் கால்நடைகளைத் தாக்குகிறது. இந்த வியாதியினால், கால்நடைகள் பொதுவாக இறந்து போவதில்லை. ஆயினும் கால்நடைகள் வேலைக்கு அருகதையற்றனவாய் ஆகிவிடுகின்றன. இந்த வியாதி கண்ட மாடுகளின் வாயிலும் பின்பு கால் குளம்புகளின் மத்தியிலும் சிறு கொப்புளங்கள் ஏற்படுகின்றன. வாயிலிருந்து எச்சில் ஒழுகும். மாடு தீனி தண்ணீரை அறவே தொடாது. நாளடைவில் இந்தக் கொப்புளங்கள் ஆறிவிடலாம். இந்த நோயினால் சில கால்நடைகள் இறப்பதும் உண்டு. இந்த நோய்க்கும் கால்நடை உதவி மருத்துவரை நாடி தடுப்பு ஊசி போட்டுக் கொள்ளலாம்.

### அடைப்பான்

இந்த நோய் ஆடு, மாடு, எருமை மற்றும் காட்டு மிருகங்கள் ஆகியவற்றையும் தாக்குகிறது. இந்த நோய் கண்ட மாடுகளின் கண்கள் சிவந்துவிடும். தீனி தின்னாது. ஜுரம் 107 டிகிரி வரை இருக்கும். இந்த வியாதியின் முக்கிய குறி அதிக ஜுரம். நோய் கண்ட கால்நடைகளைக் காப்பாற்றுவது கடினம். ஆகவே நோய் அணுகும் காலங்களில் அதாவது கோடைக்குப் பின் மாரிக் காலம் ஆரம்பமாகும் சமயம், ஆற்றில் தண்ணீர் வரும் சமயம் முதலியவற்றின் போது, தடுப்பு ஊசி போட்டுக் கொள்வதன் மூலம் வெகுவாகக் காப்பாற்ற முடியும். இந்த நோயில் கால்நடைகளுக்கு வைத்தியம் செய்யாவிட்டால் அநேகமாக இறந்துவிடுகின்றன.

மேலே சொல்லப்பட்ட வியாதிகளில் வெக்கை நோயும், கோமாரி நோயும் 'வைரஸ்' எனப்படும் நுண்ணுயிர் அணுக்களால் உண்டாக்கப்படுகின்றன. இந்த நோய்கள், நோயுள்ள மாட்டிலிருந்து வெளிப்படும் மூத்திரம், எச்சில், சாணம் மூலமாகவே பரவுகின்றன.

எனவே இந்த நோய்கள் கண்ட மாடுகளை உடனடியாகத் தனிப்படுத்தி வைத்தே வைத்தியம் செய்ய வேண்டும். இவைகளைக் கண்காணிப்பவர்கள் மற்ற மாடுகளைத் தொடக் கூடாது. இந்த நோய்கள் கண்ட மாடுகளின் எல்லாக் கழிவுகளையும் தனியே சேகரித்து எரித்துவிடுதல் மிகவும் நல்லது. இந்த இரண்டு நோய்களுக்கும் வியாதி வரும் முன்னரே தடுப்பு ஊசிகள் போடுவதன் மூலம் காத்துக் கொள்ளலாம். தொண்டை அடைப்பான் மூட்டடைப்பான், சப்பை நோய்கள் முதலிய நோய்கள் 'பேசில்லஸ்' எனப்படும் உயிரணுக்களால் உண்டாகின்றன. பெரும்பாலும் மேய்ச்சல் தரையிலிருந்தே இவ்வியாதிகள் கால்நடைகளுக்கு பற்றிக் கொள்கின்றன. மழைபெய்த பின்னர் இவ்வியாதிகள் உண்டாகின்றன. ஆகையினால் மழை காலத்திற்கு முன்பே ஆண்டிற்கு ஒரு முறைகளாவது தடுப்பு ஊசி போடுவதன் மூலமாகத் தடுத்து விடலாம்.

——




Edited and Published by its owner Sri Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2•
Annual Subscription Including 4 special numbers Rs. 10.